REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஆனி 19உ புதன் (3—7—57) ★ ★ வெளியூர்: ஆனி 20உ வியாழன் (4—7—57) [இதழ் 16

## விதையும் பயிரும்!

★

கோலாலம்பூர், ஜூலை 3—

வெளிநாடுகளுக்குப் பணம் அனுப்புவதை இந்திய அரசாங்கம் சமீபத்தில் தடைவிதித்திருந்ததல்லவா?

இதன் காரணமாக, மலேயாவிலிருந்து இனி இந்தியாவில் பணம்கட்டிப் பெற்றுக் கொள்ளக்கூடிய பார்சல்களை அனுப்பக்கூடாது என்று மலேயா அரசாங்கம் தடைவிதித்துள்ளதாகத் தெரியவருகிறது.

# அசாமின் உரிமைக் குரலுக்கு டில்லி பணிகிறது?

## எச்சரிக்கைக்குப் பின் 'எதேச்சாதிகார' முடிவை மீண்டும் பரிசீலனை செய்ய ஒப்புகிறது

### அசாமில் நிறுவ மறுத்த எண்ணெய்த் தொழிற்சாலை பற்றி விவாதிக்கத் தயாராம்

### பண்டிதர் திரும்பிய பின் அசாம் சர்க்கார் பிரதிநிதிகளுடன் விவாதிப்பராம்!

ஷில்லாங், ஜூலை 3—

'நிறுவப்படும் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை அசாம் மாநிலத்திலேயே ஏற்படுத்தவேண்டும்' என்று, கட்சி வேறுபாடுகளின்றி மாநில மக்கள் ஒருமுகமாகக் கோரிக்கை எழுப்பி வந்துள்ளனர்; பண்டிதரின் முன்பும் ஆர்ப்பாட்டம் செய்து, கோரிக்கையை வலியுறுத்தியுள்ளனர்.

டில்லியின் ஆட்சிபீடத்திலுள்ள சனநாயக அரசாங்கம், நியாய அடிப்படையில் மக்களின் விருப்பத்தைப் பூர்த்திசெய்ய மறுத்து பீகாரில் 'பிரௌனி' என்ற இடத்தில் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை நிறுவமுடிவு செய்துவிட்டது. இந்த எதேச்சாதிகாரப் போக்கை மாநில மக்கள் பலமாகக் கண்டித்து கிளர்ச்சி செய்ய முற்பட்டுவிட்டனர்.

'காங்கிரஸ் அமைச்சர்கள் பதவியிலிருந்து விலகிக்கொள்ள நேரிடும்' என்று குரலெழுப்பும் அவல நிலையும், எதிர்க்கட்சியைச் சேர்ந்த சட்டசபை உறுப்பினர்கள் சபையிலிருந்து வெளியேறி நடவடிக்கைகளைப் புறக்கணிக்கும் நிலைமையும் ஏற்பட்டுவிட்டது.

அசாமில் உருவாகியுள்ள இந்த ஆபத்தான நிலைமையையும், ஆத்திரமடைந்துள்ள மக்களின் மனப்போக்கையும், காங்கிரஸ் கட்சியின் எதிர்காலத்தையும் மனதில் கொண்டு, இப்போது மத்திய அரசாங்கம் உணர்வுபெறத் துவங்கியுள்ளது.

இந்தியப் பேரரசால் நியமிக்கப்பட்ட எண்ணெய் பற்றிய மத்திய அமைச்சர் துணைக் குழு, அசாமில் எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்சாலை ஏற்படுத்துவது பற்றி மீண்டும் ஆராய இப்போது முன்வந்துள்ளது. இது, மக்கள் மன்றத்திற்குக் கிடைத்துள்ள முதல் வெற்றி என்றே கருத வேண்டும்.

முடிந்துபோன விஷயம்—தீர்ந்துபோன காரியம் என்று வழக்கமாக கூறிவரும் மத்திய அரசாங்கம், இப்போது இந்தப் பிரச்சினையை மீண்டும் ஆராயும் அளவிற்குப் பணிந்துள்ளது.

வெளிநாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்துவரும் பண்டித நேரு டில்லி வந்ததும், இதுபற்றி முடிவு செய்ய மத்திய அரசாங்கம் இசைந்துள்ளதாகத் தெரியவருகிறது.

அசாம் மாநில அரசாங்கத்தின் பிரதிநிதிகளுடன் ஒன்று கூடிப் பேசி, இப்பிரச்சினையை முடிவு செய்ய மத்திய அமைச்சரவை இசைந்துள்ளதாகத் தெரியவருகிறது.

'அசாமில் கிடைக்கும் ஒவ்வொரு சொட்டு எண்ணெயும் அசாம் மக்களின் ஒவ்வொரு துளி இரத்தத்திற்குச் சமமானதாகும்'—என்று, காங்கிரஸ்காரர்களே அசாமில் உரிமை முழக்கமிட்டு மத்திய அரசாங்கத்தின் எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டிக்க முற்பட்டு பெற்ற இந்த முதல் வெற்றி, மற்ற மாநிலங்களில் உள்ள காங்கிரஸ்காரர்களுக்குப் பல உண்மைகளை நிச்சயம் மனக்கண் முன் கொண்டுவரும் என்று நம்பலாமல்லவா?

## மாவட்ட ஆட்சி மன்றங்களுக்கு ஆபத்து?

### அமைச்சர் தரும் தகவல்

சென்னை, ஜூலை 3—

"சென்னை மாநிலத்தில் உள்ள மாவட்ட ஆட்சிமன்றங்களை ஒழித்துவிடும் எண்ணம் சென்னை அரசாங்கத்திற்கு இல்லை"

என்று, அமைச்சர் லூர்து அம்மையார் சட்டசபையில் கூறினர்.

ஆனல், மாவட்ட ஆட்சிமன்றங்கள் எந்த அளவிற்குப் பயன்படுகின்றன என்பதைக் கண்டறிய ஒரு துணைக் குழு அமைக்கப்பட்டுள்ளதாம்.

மாவட்ட ஆட்சி மன்றங்களின் ஆயுள்காலம் நீடிப்பு பற்றியும் இந்தக் குழு முடிவு தெரிவிக்குமாம்.

## 'நல்ல சிபாரிசுகளை அமுலாக்குவது அரசாங்கத்தின் கடமையல்லவா?'

### ஏ. கோவிந்தசாமியின் கேள்விக்கு நிதி அமைச்சர் பதில்

சென்னை, ஜூலை 3—

'அரசாங்க இலாகாக்களுக்கு சட்டசபை உறுப்பினர்களைக் கொண்ட ஆலோசனைக் குழு அமைக்கும் நோக்கம் உண்டா?' என்று இன்றைய சட்டசபையில் கேள்வி ஒன்று எழுப்பப்பட்டபோது, 'இல்லை' என்று நிதி அமைச்சர் பதிலளித்தார்.

மத்திய அரசாங்கம், இந்த அடிப்படையில் அமைத்தகுழுவை இப்போது அவசியமற்றது என்று கருதுவதால், மாநில அரசாங்கமும் குழு அமைக்க விரும்பவில்லையாம்.

சிபாரிசுகள் செய்ய நியமிக்கப்படும் குழுக்கள் ஆராய்ந்து அறிவிக்கும் முடிவுகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு அமுல் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இதைப் பற்றி கழக உறுப்பினர் தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் கேள்வி ஒன்றும் எழுப்பினர்.

"நல்ல சிபாரிசுகளை கட்டாயம், ஏற்று நிறைவேற்றவேண்டியது அரசாங்கத்தின் கடமையல்லவா?"

அந்த உரிமை, சிபாரிசு குழுக்களுக்கு (அட்வைசரி கமிட்டி) கிடையாது என்றும், சட்டமாக்கும் அதிகாரம் பெற்ற குழுக்களுக்கே (ஸ்டாடூடரி கமிட்டி) அந்த உரிமை உண்டு என்றும் நிதி அமைச்சர் பதிலளித்தார்.

'சட்டமாக்கும் அதிகாரம் சட்டசபைக்கே உண்டு,' என்றும் அவர் கூறினர்.

சென்னை, ஜுன் 2—

'ஆயுதம் தாங்கிய போலீஸ் படையில் அதிகப்படியாக மலையாளிகள் உள்ளனரே, அவர்களை நீக்கும் யோசனை உண்டா?' என்று சட்டசபையில் கேட்கப்பட்டபோது, 'கிடையாது' என்று போலீஸ் அமைச்சர் பக்தவத்சலம் தெரிவித்துள்ளார்.

## 'தேர்தலுக்கு முன் கிராமங்களுக்குச் செல்லாத காமராசர் இப்பொழுதுமட்டும்செல்வதேன்?'

## தொழிலாளர் குடியிருப்புத் திட்டம்

### 'வீட்டு வாடகையைக் குறைக்க வேண்டும்'

### சட்டசபையில் ஏ. கோவிந்தசாமி வேண்டுகோள்

சென்னை, ஜூலை 3—

"தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களின் குடியிருப்புக்காக சென்னை நகரில் எருக்கஞ்சேரி, செம்பியம் ஆகிய இரண்டு பகுதிகளில் மொத்தம் 936 வீடுகள் கட்டப்பட்டுள்ளது"

என்று தொழில் அமைச்சர் வெங்கட்ராமன் சட்டசபையில், தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் கேட்ட கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் கூறியுள்ளார்.

தண்ணீர் வசதி இல்லாத காரணத்தால் சில வீடுகள் கட்டப்பட்டிருந்தும் வாடகைக்கு விடப்படவில்லையாம். தொழிற்சாலைகள் உள்ள பகுதிகளில் மட்டுமே இந்தத் திட்டம் அமுல் செய்யப்படுகிறதாம்.

குறைந்த வருமானமுள்ளவர்களுக்கு வீடு கட்டித்தரும் திட்டம் இருப்பதால், விவசாயத் தொழிலாளர்களுக்கும் இத்திட்டத்தை விரிவுபடுத்த வேண்டியதில்லையாம்!

போக்குவரத்து நிறுவனத்தைச் சேர்ந்த பஸ் ஊழியர்களுக்கென்று 100 வீடுகள் ஒதுக்கப்பட்டுள்ளதாம்!

"தற்போது தொழிலாளர்களிடம் மாதம் ரூ. 10 வாடகையாகவும், ரூ. 2 மின்சார வசதிக்காகவும் வசூலிப்பது அதிகமாகும்; இதை மாதம் ரூ. 6 என்ற வரம்புக்குக் குறைக்க வேண்டும்; இதனல் உண்மையான ஏழைத் தொழிலாளர்களுக்கு கணிசமான அளவில் சுமை குறைந்துவிடுமல்லவா?" என்று, மீண்டும் கழக உறுப்பினர் தோழர் ஏ. கோவிந்தசாமி கேள்வி எழுப்பினர்.

அமைச்சர் பதிலளிக்கையில், இப்போது வசூலிக்கப்படும் தொகையைச் செலுத்தஇசைந்த ஏராளமான மனுக்கள் தொழிலாளர்களிடமிருந்து வந்துள்ளன என்றும் குடியிருப்பு வசதியை எப்படி எல்லோருக்கும் தருவது என்பதே இப்போதைய பிரச்சினை என்றும் கூறினர்.

"தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வீடுகட்டித்தரும் திட்டத்திற்கு மத்திய அரசாங்கம் ரூ. 24,92,840 மானியமாகத் தந்துள்ளது என்றும், சென்னை அரசாங்கம் ரூ. 27,60,840 செலவிட்டுள்ளது என்றும் தோழர் எம். பி. சுப்பிரமணியம் கேட்ட கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் விவரம் தந்தார்.

## 'தி. மு. கழகத்தின் சட்டமன்ற நுழைவால் சனநாயகக் கடமை நிறைவேற்றப்படுகிறது'

### க. அன்பழகன் எம்.எல்.ஏ. தெளிவுரை

"காங்கிரசை நாம் மட்டுமல்ல—வேறு கட்சிக்காரர்களும் எதிர்க்கிருர்கள்; ஆனல் அவர்கள் எல்லாம், 'உறவுக்கு டெல்லி வேண்டும்' என்று கருதுகிறவர்கள்! சிலர், 'டெல்லி போதாது' என்று, 'மாஸ்கோவரை வேண்டும்' என்று கருதுகிறவர்களாக உள்ளனர்! நாம்தான், திராவிடத்திற்கென்ற ஒரே கட்சியாக இருக்கிறோம் என்பதால், நம்மால்தான் இக்நாட்டு மக்களுக்குப் பயனுள்ள ஒரு எதிர்க்கட்சியாக இயங்கமுடியும் என்று கூறுகிறோம்.

"பத்து ஆண்டுகளுக்கு முன் பண்டித நேரு காங்கிரசைப் பற்றிச் சொல்லும்போது—'இந்த நாட்டினை ஆண்டால், காங்கிரஸ் தான் ஆளும்; இல்லாவிட்டால் வெள்ளைக்காரன்தான் ஆளுவான்; அந்த அளவுக்கு காங்கிரஸ் வளர்ந்துள்ளது' என்று கூறினர்.

"வெள்ளைக்காரர்கள் காலத்தில், காங்கிரஸ் மக்களிடம் எந்த இடத்தைப் பெற்றிருந்ததோ, அந்த இடத்தை இன்று நாம், இந்த நாட்டு மக்களிடத்தில் பெற்றிருக்கிறோம். 'இன்றில்லாவிடினும் இன்னும் சில ஆண்டுகளுக்குள், தி. மு. கழகம் இந்த நாட்டினை ஆளும்' என்று சொல்லத்தக்க அளவு நாம் வளர்ந்திருக்கிறோம்.

"வெள்ளையர் காலத்தில் காங்கிரசில் இளைஞர்கள் எத்தகைய ஈடுபாடு கொண்டிருந்தார்களோ அந்த அளவு இன்று—இந்த வடநாட்டு கொள்ளையர் காலத்தில், இந்த நாட்டு இளைஞர்கள் கழகத்தில் ஈடுபாடு கொண்டிருக்கின்றனர்.

—இவ்வாறு, 24—6—57-ல் சென்னை—சிந்தாதிரிப்பேட்டை, முனுசாமி கிளைவுமன்றத் துவக்கவிழாவில் பேராசிரியர் க. அன்பழகன், எம்.எல்.ஏ. அவர்கள் ஆற்றிய பேருரையில் குறிப்பிட்டுவிட்டு தொடர்ந்து பேசியதாவது:—

"எழும்பூர் தொகுதியில் நான் வெற்றி பெறுவதற்கு இந்த சிந்தாதிரிப்பேட்டை மக்கள்—குறிப்பாக இந்த வட்டாரத் தாழ்த்தப்பட்ட மக்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்கு எனது நன்றியை இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

"கழகத்தின் பால் அவர்கள் அழுத்தமான பற்றுதல் கொண்டு

(4-ம் பக்கம் பார்க்க)

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 3—7—57 புதன்


## வரவு-செலவுத் திட்டம்

சென்னை அரசாங்கத்தின் 1957—58-ம், ஆண்டிற்கான வரவு-செலவுத் திட்டத்தை சட்டசபையில் நிதி அமைச்சர் வெளியிட்டுள்ளார்.

மாநிலங்கள் தங்கள் செலவுகளை, வரவுக்குத் தக்கவாறு ஈடு செய்துகொள்ள வேண்டும் என்று டில்லி எசமானர்கள் ஆலோசனை கூறியிருந்தும், சென்னை, பற்றுக்குறை திட்டத்தைத் தயாரித்துள்ளது வியக்கத்தக்கது.

புதிய வரிகள் போடப்படுவதற்கான வழிகள் அனைத்தும் ஏற்கனவே கையாளப்பட்டதின் காரணமாகவோ, தற்போது ஆட்சிக்குப் பொதுமக்களிடம் உள்ள மதிப்பைக் கணக்கிட்டோ, புதிய வரிகளை நிதி அமைச்சர், விதிக்கவில்லை என்றே கருதவேண்டியுள்ளது.

திட்டத்தை ஈடு செய்யத் தேவைப்படும் ரூ. 5 கோடியை, விற்பனை வரி, விவசாய வருமான வரி ஆகியவைகளை உயர்த்துவதன் மூலம் ரூ. 150 இலட்சம் பெற்ற பின்னரும், ரூ. 333 இலட்சம் பற்றுக்குறையாக உள்ளது.

நிதி அமைச்சர் தனது உரையில், நம்பிக்கையூட்டத்தக்க வகையில் தெளிவுபடுத்த முடியாத நிலையில், அடிக்கடி மத்திய அரசாங்கத்தின் உதவியையும், மானியத்தையும் எதிர்பார்ப்பதாகக் குறிப்பிட்டுள்ளதைக்கொண்டு, நிதி அமைச்சர் தயாரித்துள்ள வரவு-செலவுத் திட்டம் ஒரு மாவட்ட ஆட்சி மன்றத் திட்டத்தை போன்றே உள்ளது. மாநில அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு உட்படாமல் இருக்கும் இலாகாக்கள் தரும் புள்ளி விவரங்களைக் கொண்டே திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது.

துண்டுவிழும் தொகையை சரிகட்ட வருமான, சுங்க, இரயில் இலாகா வருமானங்களிலிருந்து மத்திய அரசாங்கம் பங்கிட்டுத்தரும் தொகையையே சென்னை எதிர்நோக்கி இருக்கிறது.

மேலும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகைகள் முழுவதும் செலவிடப்படவில்லை என்று திட்டக் குழு கூறியுள்ளதைக் கொண்டும், இரண்டாவது திட்டத்திலும் அதேநிலை நீடிக்கும் என்று கூறியுள்ளதைக் கொண்டும் நிதி அமைச்சர், பற்றுக் குறைத் திட்டம் தயாரித்திருக்கக்கூடும் என்றே நமக்கு நினைக்கத் தோன்றுகிறது.

சென்ற ஆண்டில் ஐந்தாண்டுத் திட்டத்தின் பணிகளுக்காக, ஒதுக்கப்பட்ட தொகையில் ரூ. 3 கோடி செலவிடப்படவில்லை என்பது வெளிப்படை. எனவே, அதைத் தொடர்ந்து திட்டப் பணிகளுக்கென இந்த ஆண்டிலும் ஒதுக்கப்பட்டுள்ள தொகை முழுதும் பயன்படுத்தப்படாது போகுமானல், அது வருந்தத்தக்கதாகும்.

சென்னை தனது செல்வாக்கை எந்த முறையில் பயன்படுத்துகிறது என்பதையும், டில்லி எந்த அளவிற்கு சென்னைக்குத் திடீர் கருணை காட்டுகிறது என்பதையும் பொறுத்தே மாநிலத்தின் எதிர்காலத்தையும் மதிப்பிட வேண்டிய அவல நிலையை இந்தத் திட்டம்,வழக்கம்போல நீடித்து நிலைபெறச் செய்துள்ளது.

'மக்களுக்கு நாங்கள்தான் நன்மை செய்யத் தகுதியானவர்கள்; எங்களால்தான் பொது மக்கள் குறைகளைப் போக்கி நல்வாழ்வு பெறச் செய்ய முடியும்' என்று கூறியவர்களின் பரிதாப நிலைகண்டு நாம் வருந்துவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? டில்லியின் ஓட்டல்லவா சென்னை!

ஆட்சிபீடத்தில் ஐந்து ஆண்டுகள் இருந்தவர்களே மீண்டும் ஆட்சிக்கு வந்திருப்பதால் தாங்கள், பெற்ற அனுபவத்தைக்கொண்டு நல்ல திட்டங்கள் தருவார்கள் என்றே பொதுமக்கள் சாதாரணமாக எதிர்பார்ப்பர்; ஆனல், திட்டம் பெருத்த ஏமாற்றத்தைத் தந்துள்ளது.

வேலையில்லாத் திண்டாட்டத்தைப்பற்றி அரசாங்கம் அக்கறை எடுத்துக் கொள்ளாமல் அலட்சியப்படுத்தி வருவது, நிதி அமைச்சரின் திட்டத்தில் இதற்கான புதிய ஏற்பாடுகள் ஏதும் காணப்படாததே போதிய சான்றாகும்.

இந்த நிலையில், சமுதாயம் எவ்வாறு முன்னேறக்கூடும்—மக்கள் எவ்வாறு நல்வாழ்வு வாழமுடியும் என்று அரசாங்கம் கருதுகிறதோ, தெரியவில்லை!

உணவுப் பிரச்சினைத் திட்டத்தில் காணப்படும் உண்மைகளைக்கொண்டு பார்க்கும்போது, இன்று நாட்டில் நிலவியுள்ள உணவுப் பற்றுக்குறையைப் பற்றியோ, விலைவாசி உயர்வைப் பற்றியோ தெளிவான கண்ணோட்டம் செலுத்த அரசாங்கம் தவறிவிட்டது என்றே நினைக்கத் தோன்றுகிறது.

நிதி அமைச்சர் பேசுகையில், 'உற்பத்தி பெருகியுள்ளது' என்று குறிப்பிட்டாரே தவிர, 'எதிர்காலத்தில் உணவு நெருக்கடி ஏற்படாது' என்று திட்டவட்டமாக அவரால் உறுதி கூற முடியவில்லை.

'விலைவாசிகள் உயர்ந்துள்ளது உண்மையே' என்று நிதி அமைச்சர் ஒப்புதல் தந்துள்ளதை நன்கு ஆராய்ந்தால், உண்மை அம்பலமாகாமல் போகாது.

'மக்களின் வாங்கும் சக்தி அதிகரித்துள்ளது' என்று, நிதி அமைச்சர் எவ்வாறு முடிவு செய்திருக்கக்கூடும் என்றும் தோன்றவில்லை.

'ஊதியம் போதவில்லை; விலைவாசிகள் உயர்ந்துவிட்டன' என்று நாட்டில் கூப்பாடு எழுப்பப்படுவதற்குக் காரணம் என்னவென்று அமைச்சர் கருதுகிறார் என்பதும் புலனாகவில்லை.

அரசாங்கம் என். ஜி. ஓ.-வினருக்கும், கிராம ஊழியர்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் அளித்துள்ள—திருப்தி அளிக்காத சிறு சலுகைகளைக் கொண்டே நிலைமை மாறிவிட்டதாகக் கருதுவது, போகப் போக அவர்கள் அனுபவித்து வரும் துயரங்களும், தொல்லைகளும் எந்த அளவிற்கு அரசாங்கத்தின்மீது மதிப்பை ஏற்படுத்தும் என்பதை நாம் சொல்லாமலே விஷயமறிந்தவர்கள் புரிந்துகொள்வார்கள்.

நெய்வேலியைப் பற்றிப் பெருமையுடன் குறிப்பிட்ட நிதி அமைச்சர், சேலத்தின் இரும்பைப் பற்றி பேசா மடந்தையாக விளங்கியுள்ளார். ஒருவேளை, டில்லி எசமானர்களின் கட்டளை கிடைக்காத காரணத்தால், அவ்வாறு மௌனம் சாதித்திருக்கக் கூடும் என்றே கருதுகிறோம்.

மக்கள்—வாழ்க்கைக்கு வழி தேட வேலை இல்லையே என்றும், உழைப்பவர்கள்—ஊதியம் போதவில்லையே என்றும், வரவுக்கும்—செலவுக்கும் ஈடு செய்ய முடியாது திண்டாடும் நிலை நாளுக்கு நாள் அதிகரித்து வரும் இந்த நேரத்தில் சிறு சேமிப்புகள் மூலம் அரசாங்கம் பணம் திரட்ட நினைப்பது விந்தையிலும் விந்தையாக உள்ளது என்பதைவிட, மக்களை கேலி செய்வதாக உள்ளது என்றே கருதவேண்டியுள்ளது.

மேலும் திட்டத்தைப் பற்றி பின்னர் தெளிவுபடுத்துவோம்.

## வெளிநாட்டுச் செலாவணி வாய்ப்பு நிலைமை சாதகமாக இருந்தும் இந்த நிலையா?

### திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகை செலவழிக்கப்பட்ட இலட்சணம்!

"முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சர்க்கார் முதலீடுக்கு ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகை ரூ. 2,386 கோடியாகும்; ஆனல், செலவிடப்பட்டதோ ரூ. 426 கோடிக்கும் குறைவு. இந்தியாவின் வெளிநாட்டு செலாவணி வாய்ப்பு நிலைமை சாதகமாக இருந்தும் இப்படி நிகழ்ந்துள்ளது."

என்று, முதல் திட்ட கால சாதனை பற்றிய திட்டக் குழு அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இந்தத் திட்டத்துக்குப் பணம் கிடைத்த வகைகள் :-

வரித் துறையிலும், இரயில்வேயிலும் கிடைத்த வருமானத்தில் மிச்சமிருந்த நிதியிலிருந்து தரப்பட்டது ரூ. 752 கோடி. மத்திய சர்க்கார் மாத்திரம் இந்தத் திட்ட காலத்தில் அதிக வரிகள் மூலம் திரட்டி அளித்த பணம் ரூ. 175 கோடி. ஏற்றுமதி சுங்க வரி இக்கணக்கில் சேரவில்லை. இரயில் வேக்கள், பிரயாண, சாமான் கட்டணங்களை அதிகரித்த வகையில் ரூ. 100 கோடி திரட்டியுள்ளது.

ஆனல் மாநில சர்க்கார்கள் எதிர்பார்த்த அளவுக்கு பணம் திரட்டவில்லை; அவைகள், தங்களுடைய பங்காக ரூ. 230 கோடி அதிக வரிவிதிப்புகள் மூலம் திரட்டி அளிக்க வேண்டுமென ஆரம்பத்தில் நிர்ணயிக்கப்பட்டது. ஆனல் ரூ. 80 கோடி மட்டுமே திரட்டின.

இத்திட்டத்துக்கு மேற்கொண்டு பணம் கீழ்க்கண்ட முறைகளில் திரட்டப்பட்டன :-

மார்க்கெட்டில் கடன் எழுப்பியது ரூ. 205 கோடி; சிறு சேமிப்புக் கடன் ரூ. 304 கோடி; பிற மூலதன வருவாய் ரூ. 91 கோடி; வெளிநாடுகள் உதவி ரூ. 188-கோடி.

## ஆதாரமிருந்தால் விலகிவிடுகிறாராம்!

### காங்கிரஸ் கட்சி கொரடா 'மூடு திரை' போட முயற்சிக்கிறர்

சென்னை, ஜூலை 1—

சென்னை அரசாங்க வரவு-செலவுத் திட்டத்தின் மீது நடைபெற்ற விவாதத்தில் காங்கிரஸ் கட்சி கொரடா பேசுகையில், காங்கிரஸ்காரர்கள் அதிகாரத்தைத் தவருகப் பயன்படுத்தி வருவதில்லை என்றும், அவ்வாறு கூறுபவர்கள் ஆதாரங்களுடன் உறுதிப்படுத்தினல், தான் சட்டசபை உறுப்பினர் பதவியிலிருந்து விலகிக்கொள்வதாகவும் ஊறிந்த விஷயத்திற்கு 'மூடு திரை' போட்டுப் பேசியுள்ளார்.

## தற்குறிகளைப் பெருக்கும் திட்டமா?

### கல்வி முன்னேற்றத்தில் காங்கிரஸ் நடுக்கம்

#### மானியக் குழுத் தலைவர் கண்டனம்

மைசூர், ஜூலை 1—

இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுத் தலைவர் தேஷ்முக், தமக்களிக்கப்பட்ட கௌரவ டாக்டர் பட்டத்தைப் பெற்றுக்கொண்டு பேசுகையில், இந்தியப் பேரரசின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கல்வி முன்னேற்றத்திற்கு அதிகப் பணம் ஒதுக்கப்படாததை கண்டித்ததுடன், மத்திய ஆட்சியின் குருட்டுத்தனமான போக்கையும் அம்பலமாக்கியுள்ளார்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கல்வி முன்னேற்றத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையுடன், இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளதை ஒப்பிட்டு விகிதாச்சார நோக்குடன் காணும்போது, இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ள தொகை 'குறைவு' என்ற உண்மையை வெளிப்படுத்தியுள்ளார்.

"கல்வித் துறையில் அக்கறை செலுத்தாவிடில், நாட்டின் தொழில் துறையிலோ, மற்ற துறைகளிலோ முன்னேற்றத்தை காணமுடியாது" என்று அவர் எச்சரித்துள்ளார்.

இந்தப் பேருண்மையை ஆட்சியிலிருப்போர் புரிந்துகொள்ளாததைக் கண்டு வருத்தம் தெரிவித்துள்ளார்.

"நாட்டின் அபிவிருத்திக்கும், மறுமலர்ச்சிக்கும் பல்கலைக் கழகங்கள் இன்றியமையாதவை; அவைகளுக்குப் போதிய நிதி வசதி செய்துதரவேண்டும்"

என்று, இந்தியப் பேரரசின் தவறைச் சுட்டிக்காட்டி, இரண்டாவது திட்டத்தை, கல்விக் கண்ணோட்டத்தில் சூசகமாகக் கண்டித்துள்ளார்.

## ஆயுதம் தாங்கிய போலீஸ் படையினருக்குக் குடியிருப்பு வசதி

### கழக உறுப்பினர்களின் கேள்விகளுக்கு போலீஸ் அமைச்சரின் பதில்

சென்னை, ஜூலை 2—

பாதுகாப்பு அடிப்படை நோக்குடன் புழலேரி அருகில் ஆயுதம் தாங்கிய போலீஸ் படை இல்லை என்றும், எனவே, அவர்களுக்கு 'படி' செலவு தரப்படுகிறதா என்ற கேள்வி எழவில்லை என்றும், சாதாரணமாக நகரத்தில் அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 12 அணு மட்டுமே 'படி' செலவாகத் தரப்படுகிறது என்றும் போலீஸ் அமைச்சர் பக்தவத்சலம் தெரிவித்தார்.

எம். பி. சுப்பிரமணியம்: 'ஆயுதம் தாங்கிய போலீஸ் படையில் உள்ளவர்களை, அவர்களுடைய உழைப்புக் காலத்திற்குப் பிறகு சாதாரண போலீஸ் படையில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்களா?'

அமைச்சர் :—'அவகாசம்' வேண்டும்.'

க. அன்பழகன் :—ஆயுதம் தாங்கிய போலீஸ் படையில் உள்ளவர்கள் குடியிருப்புப் போன்ற வசதிகள் பற்றி புகார் செய்வதை அரசாங்கம் அறியுமா? அறிந்திருந்தால், அதுபற்றி என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது?'

அமைச்சர்:—'ஆயுதம் தாங்கிய போலீஸ் படையினர், குடியிருப்பு பற்றி குறைபட்டுக்கொண்டதாகவோ, மனு செய்துகொண்டதாகவோ தெரியவில்லை; அவர்களுக்குக் குடியிருப்பு வசதி செய்து தரப்பட்டுள்ளது. மேலும் செய்யவும் அரசாங்கம் கருதியுள்ளது."

## 'செயலற்றுப் போனதேன்?

### டிட்டோ விளக்கம்

அங்கேரியில் நடைபெற்ற மக்கள் எழுச்சியை ரஷ்யப் படைகள் ஒடுக்கியபோது, யூகோ தலையிட்டால் மீண்டும் உலகப் போர் மூண்டுவிடுமோ என்று அஞ்சியே தான் தலையிடவில்லை என்று மார்ஷல் டிட்டோ 'டெலிவிஷன்' பேட்டியில் தெரிவித்துள்ளார்.

## உலக அணுசக்தி மாநாடு

நியூயார்க், ஜூலை 1—

1958 செப்டம்பர் 13-ந்தேதியன்று ஜெனிவாவில் அணுசக்தி மாநாடு ஒன்று நடத்த ஐ. நா. முனைந்துள்ளது.

## கன்னியாகுமரி மாவட்ட அரசாங்க ஊழியர்கள்

### அமைச்சர் தரும் தகவல்கள்

சென்னை, ஜூலை 2—

"புதிய மாநில அமைப்பிற்குப் பிறகு சென்னை மாநிலத்துடன் கன்னியாகுமரி மாவட்டம் இணைக்கப்பட்டது. அந்தப் பகுதியில் உள்ள அரசாங்க ஊழியர்களை சென்னை அரசாங்க இலாகா ஊழியர்களுடன் இணைக்க இதுவரை விதிகள் ஏற்படுத்தப்படவில்லை" என்று, முதலமைச்சர் சார்பாக நிதி அமைச்சர் சட்டசபையில் தெரிவித்தார்.

"இந்தத் தாமதத்திற்கு காரணம், சென்னை அரசாங்கம் மத்திய அரசாங்கத்தின் ஆலோசனைகளை எதிர்நோக்கியுள்ளதேயாகும். அந்தச் சிபாரிசுகளை ஆராய்ந்து ஆவன செய்ய அரசாங்கப் பிரதமச் செயலாளர், நிதி இலாகாச் செயலாளர், வருமான நிறுவனச் செயலாளர் ஆகியோர் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது; இது எப்போது முடியும் என்று இப்போது கூற முடியாது; விரைவிலேயே சிபாரிசுகள் எதிர்பார்க்கப்படுகிறது. கன்னியாகுமரி பகுதியிலுள்ள அரசாங்க ஊழியர்களின் உரிமைகள் பாதுகாக்கப்படும்" என்றும் நிதி அமைச்சர் அறிவித்தார்.

## ரஷ்யாவின் புதிய விமானம்!

84 பிரயாணிகளையும, 3 டன் எடையுள்ள சாமான்களையும் ஏற்றிக்கொண்டு பறக்கக்கூடிய ஒரு புதிய விமானத்தை ரஷ்யா கண்டுபிடித்துள்ளதாம்.

One side of the page is dark



## வெந்த புண்ணில் வேல்கொண்டு குத்தாதீர்!

### அரசியலாருக்கும் அதிகாரிகளுக்கும் அறிவுறுத்தல்

### தாளமுத்து அனுதாபக் கூட்டத்தில் என். வி. நடராசன் இடித்துரை

அண்மையில், பட்டப்பகலில் படுகொலைக்கு ஆளான 'தூத்துக்குடி தொழிற்சங்கங்களின் தலைவரும் கழக உறுப்பினருமான வீரர் தாளமுத்துவின் அனுதாபக் கூட்டம் 23—6—57 இரவு 7-மணிக்கு, பொதுக்குழு உறுப்பினர் தோழர் எம். எஸ். சிவசாமி அவர்கள் தலைமையில் தூத்துக்குடியில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் நூற்றுக்கணக்கான போலீசாரும், அதிகாரிகளும் ஆயுதங்களுடன் நடமாடிக் கொண்டிருந்தனர்.

தலைவர் தமது முன்னுரையில், கழகத்தின் உண்மையான தொண்டர்களையெல்லாம் இவ்வித படுகொலைக்கு ஆளாக்கப்படுவோரைத் தண்டிப்பதற்குப் பதிலாக கழகத் தோழர்கள் மீதே அதிகாரிகள் கெடுபிடி நடவடிக்கைகள் மேற்கொள்வதை மனவேதனையுடன் எடுத்துக்கூறினர்.

அடுத்து நகரச செயலாளர் தோழர் ஜோசப் அவர்கள் தாளமுத்துவின் தொண்டினை விவரித்துப்பேசினர்.

இறுதியாக துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன் பேசுகையில் குறிப்பிட்டதாவது :

"திராவிட முன்னேற்றக் கழகத்தில் இரகசியத் திட்டம் என்றும், பொதுவாக பேசப்படுவது வேறொன்றுமாக இருந்து வருவதில்லையென்பதை அரசியலாரும், போலீஸ் அதிகாரிகளும் நன்கு அறிவர். அவ்வாறிருந்தும், தூத்துக்குடியில் சமீபமாக நடைபெற்றுவரும் அக்கிரமங்களுக்கு யார் காரணமென்று போலீஸ் அதிகாரிகளே ஐயுறுகின்றீர்களோ—மனமார உணருகிறீர்களோ — அப்பேர்ப்பட்ட சமுதாய விரோதிகள்மீது எக்தெந்த கெடுபிடி நடவடிக்கைகளை மேற்கொள்ளப்படுகின்றதோ அதே சட்டங்களை, கண்கலங்கி நிற்கும் இங்குள்ள கழகத்தின் தூய்மையான தொண்டர்கள்—தோழர்கள்—நிர்வாகிகள்மீதும் பிரயோகிப்பதென்றல் இதைவிட அநீதி வேறென்னயிருக்க முடியும்? அதிகாரிகளின் இவ்வித போக்கினல் அக்கிரமக்காரர்களின் கைதான் ஓங்குமேயல்லாது, நகரில் அமைதி நிலவிவிடுமென்று எதிர்பார்ப்பது இறுதியில் ஏமாற்றமாகவே முடியும். அதுமட்டுமல்லாமல், இவ்வித தெளிவற்ற உத்தரவுகளையும், சட்டங்களையும் நேர்மையாளர்கள் மீது விதிப்பதானது நாளா வட்டத்தில் ஆட்சியாளருக்கே தொல்லையாயும் முடியக்கூடும் என்பதை அதிகாரிகள் இனியாவது உணரவேண்டுகிறேன்.

"பொதுப் பணியில் பலாத்கார நடவடிக்கைகளை யார் மேற்கொண்டிருந்தாலும்—அது தி. மு. கழகத் தோழர்களானலும் எவ்வித நடவடிக்கை வேண்டுமானலும் எடுத்துக்கொள்ளட்டும். நாங்கள் அதற்கு குறுக்கே நிற்க மாட்டோம்; ஆட்சியாளரை கெஞ்சவும் மாட்டோம். பலாத்கார எண்ணங்களினலும், நடவடிக்கையினலும் கட்சி விறுவிறுவென்று வளருவதைவிட, தூய்மையான பணியினை அஸ்திவாரமாகக்கொண்டு, கொஞ்சம் கொஞ்சமாக வளர்ச்சியடைவதையே தி. மு. கழகம் தனது உயரிய எண்ணமாகக்கொண்டிருக்கிறது.

இத்தகைய உயர் தன்மை கொண்ட உள்ளூர் தி. மு. கழக முக்கியஸ்தர்கள்மீதும், நிர்வாகிகள் மீதும் சமீப காலமாக போலீஸ் அதிகாரிகள் எடுத்துள்ள நடவடிக்கைகளானது, கழகத்தின் கண்மணிகளை இழந்து தயருறும் எங்கள் அனைவரையும் வெந்த புண்ணில் வேல்கொண்டு குத்துவதைப் போன்ற அக்கிரமத்திற்கு மேலும் பலியாக்குவதாகவே இருக்கிறது. இங்கு கழகத்தில் ஈடுபாடுகொண்டு பணியாற்றும் ஆயிரக்கணக்கானவர்களை மறைமுகமாக அச்சமூட்டும் செயலாகயிருக்க முடியுமோ என்றும் ஐயுறுகிறோம்.

"அக்கிரமக் காரியங்களில் ஈடுபட்டிருப்போர் எவராயிருப்பினும் அவர்களைத் திருத்தவோ அல்லது தண்டிக்கவோ ஆற்றலில்லாத இந்த அரசாங்கம், அனைவரையுமே கெடுபிடி சட்டத்திற்கு உள்ளாக்கி, இடைவிடாது தொல்லை விளைவிப்பது நீதியாகுமாயென்பதை இனியாகிலும் சிந்தித்துச் செயலாற்ற வேண்டுகிறோம்.

"தோழர்கள் கே. வி. கே. சாமி, தாளமுத்து ஆகியோரை அக்கிரமக்காரர்கள் படுகொலை செய்துவிடுவதாலும், போதாக் குறைக்கு உண்மைத் தொண்டர்களை கெடுபிடி சட்டத்தால் தொல்லைக்கு ஆளாக்குவதாலும் தூத்துக்குடியிலே கழகம் மறைந்துவிடுமென்று கருதப்படுமானல் அதைவிட அறிவின்மை வேறு இருக்கமுடியாது.

"உடையார்பாளையம் ஆசிரியர் வேலாயுதம், நெல்லிக்குப்பம் மஜீத், சென்னை பாண்டியன் ஆகியோரைக் கொலை செய்துவிட்டதினல் அங்கெல்லாம் கழகம் மறைந்துவிட்டதா அல்லது வளர்ந்ததா என்பதை, அக்கிரமத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் எண்ணிப்பார்த்து நல்லறிவு பெறுமாறு மாவீரன் தாளமுத்துவின் இந்த அனுதாபக் கூட்டத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"அக்கிரமக் காரியங்களில் ஈடுபட்டுள்ளவர்கள் மனவளம் பெறுகிறார்களோ இல்லையோ அதிகாரிகளாகிலும் தங்களின் பொறுப்பை உணர்ந்து நீதியைக் கடைபிடித்து நடக்க எங்களின் இந்த எடுத்துக்காட்டை வேண்டுகோளாகக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

"தி. மு. கழகம், சட்டத்திற்கு மதிப்பு தருவதில் முதலிடம் பெற்றுள்ளது என்பதை நாடறியும். இன்னும் சொல்லப்போனல் சட்டத்தை மதிக்காமல் நடக்கும் இந்த விசித்திர ஆட்சியில், எதிர்க்கட்சியாகிய தி. மு. கழகம், சட்டத்திற்கு மதிப்பு அளிப்பதில் தவறியது கிடையாது; ஆனல் அந்த நல்ல எண்ணத்தை—பண்பை மதிக்கும் மனவளம் இல்லாமல், கழகத்தின் உண்மைத் தொண்டர்களுக்கு தொல்லை விளைவிக்குமானல் சட்டத்தை நாங்கள் மதிக்கமுடியாத நிலையை உண்டாக்கிய குற்றம் அரசியலாரையோ அல்லது அதிகாரிகளையோ சாரும் என்பதை அறிவுறுத்த விரும்புகிறேன்.

"தி. மு. கழகத்தினர் பலாத்காரவாதிகளல்ல; அந்த எண்ணமும் எங்கள் உள்ளத்திலில்லை. அவ்வித போக்கு உடையவர்கள் கழகத்தில் உறுப்பினர்களாயிருக்க இலாயக்கற்றவர்கள் என்பதைத் திட்டவட்டமாக எடுத்துக் காட்டியிருக்கிறோம். இதனையும் அரசியலார் அறிவர் என்றே நம்புகிறோம்.

"எனவே, இவ்வித தூய்மையான இயக்கத் தோழர்களை அநியாயமாக வீண் தொல்லைகளுக்கு ஆளாக்குவதானது ஏழை அழுத கண்ணீர்க்கு எந்த சக்தி உண்டு என்பதை அக்கிரமக்காரர்களும் அதே சமயத்தில் அரசியலாரும் உணர வேண்டுகிறோம். ஆகவே, அதிகார வர்க்கத்தின் 'ஜபர்தஸ்து,' அநியாயமாக இங்குள்ள தோழர்கள்மீது தாவித்தாவி வெறியாட்டம் போடும் சம்பவங்கள் தலைகாட்டாது என்று நம்புகிறோம்.

"தோழர் தாளமுத்து அவர்கள் ஆற்றியுள்ள மகத்தான தொண்டும், உள்ள உறுதியும் நமக்கெல்லாம் வழிகாட்டியாகயிருந்து, நமது பணி. வெற்றியடைய வேண்டுமென்று அனைவரும் கட்டுப்பாடாகப் பணியாற்றுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்"

மேலும் அவர் பேசுகையில், தி. மு. கழகத் தோழரான தாளமுத்து தொழிற்சங்கங்களுடன் தொடர்பு கொண்டிருந்த விவரத்தை எடுத்துக்கூறி, தலைமைக் கழக சார்பில் அவரது குடும்பத்தாருக்கு அனுதாபமும் தெரிவித்துக் கொண்டார்.

செயலாளர் நன்றிகூற கூட்டம் இரவு 9-30 மணிக்கு முடிவுற்றது.

## மறைவு

சிதம்பரம் வட்டம்—பரிபூரணநத்தம் தி. மு. கழகப் பொருளாளர் தோழர் அ. கலியபெருமாள் அவர்கள், சளிக்காய்ச்சலால் பாதிக்கப்பட்டு 22—3—57 மாலை 3 மணிக்கு இயற்கை எய்திய செய்திகேட்டு வருந்துகிறோம்; தோழரின் பிரிவால் வருந்தும் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபம் உரியதாகுக.

(ஆ—ர்)

## சிறுசேமிப்புத்திட்டத்தில் புதிய அம்சம்!

### திருமணம், பிறந்த நாள் பரிசுகட்கு அனுப்பலாம்

புதுடில்லி, ஜூலை 1—

சிறு சேமிப்புத் திட்டத்தின் புதிய அம்சமாக அஞ்சல் இலாகா, திருமணம், பிறந்த நாள் பரிசாக வழங்குவதற்குப் பயன்படும் 'நன்கொடை கூபன்'கள் ரூ. 5 முதல் ரூ. 1,000 வரை உள்ள மதிப்புக்கு வெளியிட்டுள்ளது.

புதுடில்லியில் அஞ்சல் நிலையத்தில் அமர்ந்து மத்திய அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி, உள்நாட்டு அமைச்சர் பந்திற்கு முதல் முதல் ரூ. 100 மதிப்புள்ள 'நன்கொடை கூபனை விற்ருர் என்று தெரிய வருகிறது.

## மத்திய அமைச்சருக்குக் கைத்தறி மாலை!

### நினைவுச் சின்னமாக ஏற்றுக் கொண்டாராம்

சென்னை, ஜூலை 1—

"தென்னகத்து நாகரிகச் சின்னமான கைத்தறி ஆடையை அணிவிக்கிறேன்"

என்றுகூறி, அஞ்சல்—தொலைவழி இலாகா ஊழியர் சங்க மாநாட்டில் சங்கச் செயலாளர் மத்திய அமைச்சர் இராஜ்பகதூருக்கு கைத்தறித் துண்டு அணிவிக்க, அமைச்சர் அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு 'இந்த மாலையை மாநாட்டின் நினைவுச் சின்னமாக ஏற்றுக் கொள்கிறேன்' என்று தெரிவித்துள்ளார்.

## 'திட்டம் வேறு-இலட்சியம் வேறு'

### 'விடுதலைப் படையில்தான் மக்கள் அணிவகுப்பர்'

### சென்னை 14-வது வட்ட தி. மு. க. பொதுக்கூட்டத்தில் கி. மனேகரன், கண்ணதாசன் முழக்கம்

சென்னை, ஜூலை 1—

சென்னை 14-வது வட்ட தி. மு. கழகத்தின் சார்பில், நேற்று இரவு 7 மணியளவில் அண்ணுப்பிள்ளை தெருவில் (சென்னை கொத்தவால்சாவடி யருகில்) ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் தோழர் கே. எஸ். இலட்சுமணன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் தோழர் கி. மனேகரன் அவர்களும், தோழர் கண்ணதாசன் அவர்களும், கருத்துரை வழங்கினர். தோழர்களின் சொற்பொழிவு நிகழ்வதற்குமுன், அண்ணு அவர்களின் சொற்பொழிவும், தோழர் எச். வி. சீனிவாசன் இயக்கப் பாடல்களும் ஒலிபரப்பப்பட்டது.

கூட்டத்திற்கு பல்லாயிரக் கணக்கான பொதுமக்கள் மூன்று விதிகள் முழுவதும் நிறைந்திருந்தார்கள்.

தலைவர் தனது முன்னுரையில் மாற்றார் நம்மையும்—நமது கொள்கைகளையும் இழித்தும் பழித்தும் கூறினலும் நமது கொள்கைகள் பட்டி—தொட்டிகளெங்கும் பரவிவருகிறதென்றும், காரணம், நமது கழகக் கொள்கைகளின் தூய்மையும் நம்முடைய உண்மையான தொண்டும்தான் என்பதை விளக்கினர்.

அடுத்துப் பேசிய தோழர் கண்ணதாசன் அவர்கள் ஒரு கட்சியின் கொள்கையில் மக்கள் ஆழ்ந்த நம்பிக்கை வைத்தால்தான் அக்கட்சியின் நடவடிக்கைகளில் கலந்து கொள்வார்களென்றும், எந்த நாட்டிலும் அம்மாதிரியான கட்சிகள்தான் ஒரு விடுதலைக் கட்சியாக மலரும் என்பதையும், நாம் அடுக்குச் சொல் பேசுவதால்தான் மக்கள் கூடுகிறார்கள் என்று காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்களென்றும், ஆனல் இந்தியத்துணைக்கண்டம் விடுதலை பெறுவதற்குமுன்பு அவர்களுக்கு மக்கள் திரண்டது ஏன் என்றும், அவர்கள் அப்பொழுது அடுக்குச் சொல் பேசினர்களா என்றால் இல்லை என்றும், ஆனலும் மக்கள் கூடினர்கள் என்றால் அப்பொழுது அவர்களின் கொள்கைகளை மக்கள் தூய்மையானதாகக் கருதினர்கள் என்றும் எடுத்துக் கூறினர்.

மேலும் அவர் பேசுகையில், இந்தியத் துணைக் கண்டம் சுதந்திரம் பெறுவதற்கு முன்பு, நாட்டில் இருந்த சுபிட்சத்தையும் இவர்கள் ஆட்சிக்கு வந்த பின்னர் நாடுபடும் துன்பங்களையும் விளக்கினர்.

இறுதியாகப் பேசிய நாஞ்சில் கி. மனேகரன் அவர்கள் கழகக் கொள்கைகளை மக்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்பதற்கு தேர்தலில் கழகம் பெற்ற வாக்குகளே சான்றாகும் என்றும், புதிய வரிகளை கண்டித்தும், ஐந்தாண்டுத் திட்டத்தை காங்கிரசார் ஒரு இலட்சிய மென்கிறார்கள் என்றும் திட்ட மென்பது ஒரு இலட்சியமாகாதென்றும், இலட்சியம் நிறைவேற திட்டம் ஒரு கருவியாகத்தான் அமையும் என்றும், அப்படி அவர்கள் வைத்திருக்கும் இலட்சியம் வடநாட்டைத்தான் வாழ்விக்க உதவுமென்றும்,தென்னாட்டைச் சுரண்டி வடநாட்டை வாழ்விக்க திட்டம் ஒரு சாதனமாகப் பயன்படுகிறதென்றும் விளக்கி நீண்டதோர் பேருரை நிகழ்த்தினர்.

தலைவர் முடிவுரையுடன் 14-வது வட்ட தி. மு. கழகப் பொருளாளர் தோழர் பானு நன்றிகூற கூட்டம் முடிவுற்றது.

தோழர்களுக்குஒட்டல் தொழிலாளர்களின் சார்பில் மலர்மாலைகள் அணிவிக்கப்பட்டன. (ந-நி.)

## எதற்காகவோ?

1960-ல் ரஷ்யாவில் விமானங்கள் இருமடங்காகவும், மற்ற போக்குவரத்து சாதனங்கள் மூன்று மடங்காகவும் பெருகியிருக்கும் என்று 'பிராவ்டா' இதழ் கூறியிருக்கிறதாம்!

## அன்பளிப்புகள்

16-6-57-ல் பம்பாய் தாராவி தி. மு. கழகத் தோழர் ஜே. எஸ். அமிர்தலிங்கம்-தோழியர் சுந்தரி வாழ்க்கை ஒப்பந்தவிழா, தாராவி—பால்வாடி—புதுச்சாவில் தோழர் எஸ். டி. டி. இராச அவர்கள் தலைமையில் நடைபெற்றதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

* * *

நெல்லை மாவட்டம்—மணிமுத்தாறு தி. மு. கழக ஆதரவாளர்கள் 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 5 அன்பளிப்பாகத் தந்துள்ளார்கள்.

* * *

20—6—57-ல், மேலூர்—(மதுரை மாவட்டம்) 'சந்திரா மிட்டாய் கடை' உரிமையாளர் தோழர் சுப்பையாவின் ஆண் மகவுக்கு, தோழியர் சத்தியவாணிமுத்து எம். எல். ஏ. அவர்களால் 'இளங்கோவன்' எனப் பெயரிடப்பட்டதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

* * *

19—5—57-ல், ஆமதாபாத் தி. மு. கழக மேதின விழாவில் தோழர் கி. மனேகரன் கலந்து கொண்டபோது, தோழர் சி. என். முருகேசனின் பெண் மகவுக்கு, 'சத்தியவாணிமுத்து' எனப் பெயரிட்டதன் நினைவாக ரூ. 2-ம், தோழர் ஆர். பி. சக்தரின் பெண் மகவுக்கு 'மங்கையர்க்கரசி' எனப் பெயரிட்டதன் நினைவாக ரூ. 2-ம், தோழர் எம். எழுமலையின் ஆண் மகவுக்கு 'அன்பழகன்' எனப் பெயரிடப்பட்டதன் நினைவாக ரூ. 1-ம், ஆக மொத்தம் ரூ. 5-ம் 'நம் நாடு' வளர்ச்சிக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டது.

* * *

தோழர் ஏ. எஸ். ஆறுமுகம் (மிளகாய்ப் பொடி வியாபாரி) அவர்கள் 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பளிப்பாகத் தந்துள்ளார்.

* * *

28—5—57-ல், தெ.ஆ. மாவட்டம்-தெக்கிடுப்பில், தோழர் சந்திரசேகரன் துணைவியார் தோழியர் தமிழ்மணிக்கு நடைபெற்ற பொற்காப்பு அணிவிப்பு விழாவையொட்டி 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பாகத்தரப்பட்டது.

* * *

16—6—57 காலை 8½ மணிக்கு புதுவை உப்பளம் கடைப்பேட்டில் தோழர் ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ. தலைமையில் நடைபெற்றதோழர் இரா. கோதண்டபாணி—தோழியர் இரத்தினம்பாள் திருமண நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பு தரப்பட்டது.

* * *

2—6—57 காலை 10 மணிக்கு, நாகை மருத்தவர் தெருவில் தோழர் என். விசயாகவன் தலைமையில் நடைபெற்ற தோழர் மருதவனம் — தோழியர் செல்வாம்பாள் திருமண நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பு தரப்பட்டது.

* * *

9—6—57 காலை 11 மணிக்கு, நாகை வடக்கு பால் பண்ணைச் சேரியில் தோழர் கே. கே. சித்திரவேலு தலைமையில் நடைபெற்ற தோழர் இராசகோபால்-தோழியர் மேனகா திருமண நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பு தரப்பட்டது.

* * *

6—6—57 காலை 10 மணிக்கு, சென்னை - தண்டையார்பேட்டை இரட்டைக் குழி சந்து, என். 34 இல்லத்தில் தோழர் என். சிவராத்தினம் தலைமையில் நடைபெற்ற தோழர் மாரிமுத்து — தோழியர் அன்னக்கிளி திருமண நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பு தரப்பட்டது.

அன்பளிப்புத் தொகைகள் எல்லாம் வரப்பெற்ரேம்; நன்றி—பொறுப்பாளர்.

வரவு-செலவுத் திட்ட விவாதம்:

# இப்போதும் போலீஸ் இலாகாவிற்கு ரூ. 5 கோடி ஒதுக்கியதற்கு காரணம்?

கழக உறுப்பினர் எம். பி. சாரதி கேள்வி

சென்னை அரசாங்க வரவு-செலவுத் திட்டத்தின்மீது நடைபெறும் விவாதத்தின்போது கழக உறுப்பினர் எம். பி. சாரதி பேசுகையில், நல்ல பல கருத்துக்களை தெரிவித்துள்ளார்.

விலைவாசி உயர்ந்துள்ள இந்த நிலையில் பற்றுக்குறை வரவு-செலவுத் தயாரித்து வரியை உயர்த்தி, ரூ. 150 இலட்சம் ஈடுசெய்ய முயல்வதைக் கண்டித்தார்.

ஒருமுனை விற்பனை வரியைப் புகுத்த வேண்டும் என்று பொது மக்களும், வியாபாரிகளும் வற்புறுத்தி வந்திருந்தும், அரசாங்கம் அதைப்பற்றி ஆவன செய்யாமல் இருப்பதைக் கண்டித்தார்.

ரூ. 10,000 முதல் ரூ. 25 000 வரையுள்ள விற்பனைக்கு சலுகை வேண்டும் என்று சிறு வியாபாரிகள் கோரியது குறித்து அரசாங்கம் கருத்தறிவிக்காமலிருப்பதைச் சுட்டிக்காட்டினர்.

சென்னை அரசாங்கத்தின் சிக்கனத் திட்டத்தை பற்றி ஆராய ஒரு அதிகாரியை நியமிப்பதைக் கண்டித்து, அப்படிச் செய்வதானாலும் ஒரு பெரிய நீதிபதி போன்றவர்களையே நியமிக்க வேண்டும் என்று யோசனை கூறினர்.

வேலூரில், போலீஸ் சுருக்கெழுத்தாளர், துப்பறியும் இலாகாவினர் இருப்பதால் வீண் செலவு ஏற்படுகிறது என்பதைச் சுட்டிக்காட்டி, அவர்களை மாவட்ட அடிப்படையில் பகிர்ந்து பணியாற்றவிட வேண்டும் என்று யோசனை கூறினர்.

ஆந்திரம், கேரளம், கன்னடம் பிரிந்த பின்னரும் முன்புபோலவே,போலீஸ்இலாகாவிற்கு ரூ.-5 கோடி ஒதுக்கியிருப்பதற்கு காரணம் புரியவில்லை என்றும், அது அவசியமற்றது என்றும், ஆட்சி தடியாட்சியாக அமைவதாக இருந்தால் தவிர இவ்வளவு அதிக தொகை செலவிடவேண்டிய அவசியம் இல்லை என்பதையும் சுட்டிக்காட்டினர்.

'சலுகைகள் தரப்பட்டது என்பதெல்லாம், உண்மையில் ஏதோ கூப்பாடு போடுகின்றனரே என்ற காரணத்தால் தரப்பட்டதேயாகும்.'

## இந்தியாவில் நிலநடுக்கம்

ஷில்லாங், ஜூலை 2—

இன்று காலையில் இங்கு மூன்று முறை நிலநடுக்கம் ஏற்பட்டதென்றும், அடுத்தடுத்து இரு முறை ஏற்பட்ட நில நடுக்கம் கடுமையானதாக இருந்ததென்றும், அதிர்ச்சிகள் ஒரு நிமிட நேரம் நீடித்திருந்ததென்றும் செய்திகள் தரப்பட்டிருக்கின்றன.

பல பகுதிகளில் தோன்றிய இந்நில நடுக்கத்தால் உயிர்ச் சேதமோ, சொத்துச் சேதமோ ஏற்பட்டதாகத் தகவல் இல்லையாம்.

அன்றியும், இம்பாலிலும், கல்கத்தாவிற்குக் கிழக்கே 270 மைல் தொலைவிலும் சில நடுக்கம் தோன்றியதாம்.

# ஆந்திர அரசாங்கத்திற்கு நெருக்கடி

## கிராம ஊழியர்கள் இறுதி எச்சரிக்கை

நெல்லூர், ஜூலை 2—

ஆந்திர மாநிலத்தில் உள்ள பல்வேறு மாவட்டங்களில் பணியாற்றும் கிராம அதிகாரிகளின் பிரதிநிதிகள் 600 பேர் மாநாடொன்றில் ஜூலை 30-ந் தேதிக்குள் இடைக்கால நிவாரணம் தரப்பட வேண்டும் என்று வற்புறுத்தியுள்ளனர். ஆந்திர அரசாங்கம் இதற்கு இணங்க மறுத்தால் ஆந்திர மாநிலத்தில் உள்ள கிராம அதிகாரிகள் தங்கள் வேலையை இராஜினமா செய்துவிட முடிவு செய்துள்ளதாக இறுதி எச்சரிக்கை செய்துள்ளனர்.

ஆந்திர மாநிலத்தில் 40,000 கிராம அதிகாரிகள் உள்ளனர்.

தாங்கள் கோரிக்கைகள் நிறைவேற்றப்படும் வரையில் கிராம அதிகாரிகள் 'ஜமாபந்தி'யில் கலந்து கொள்ளக் கூடாதெனவும், மாநாடு அவர்களுக்கு உத்திரவிட்டிருக்கிறது.

கிராம அதிகாரிகளின் இந்த முடிவு குறித்து ஆந்திர வருமான வரி அமைச்சர் கருத்தறிவிக்கையில் கிராம அதிகாரிகளின் கோரிக்கைகளைக் கவனிப்பதற்கு அரசாங்கம் குழு ஒன்றை நியமிக்க முடிவு செய்துள்ளது என்றும், அந்தக் குழுவின் முடிவுகள் கிடைத்த பின்னர் ஆவன செய்யப்படுமென்றும், எனவே அவசரப்பட்டு கிராம அதிகாரிகள் எதும் செய்ய முற்படக்கூடாதென்றும் கூறியுள்ளார்.

கிராம அதிகாரிகள் இராஜினமாச் செய்தால் அதை ஏற்றுக் கொள்ளுமாறு கலெக்டர்களுக்கு உத்தரவு பிறப்பித்திருப்பதாகவும் அவர் கூறினர்.

## திருமணங்கள்

5—7—57 காலை 9-மணியளவில், கிருஷ்ணகிரி—தவுல்தாபாத் 'திராவிடன் புக் ஸ்டால்' உரிமையாளர் தோழர் ஆர். வெங்கடராசுலு—தோழியர் தனஇலட்சுமி வாழ்க்கை ஒப்பந்தவிழா, தவுல்தாபாத் — நெசவுக்காரர் தெரு, மணமகன் இல்லத்தில் நடைபெறும்; அன்பர்கள் இதையே அழைப்பாகக் கருதி வருகை தந்து விழாவை சிறப்பிக்கக் கோரப்படுகிறார்கள்.

இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 5 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

* * *

8—7—57 காலை 9-மணிக்கு திருக்கழுக்குன்றம் தோழர் விசுவநாதன்—தோழியர் பார்வதி வாழ்க்கை ஒப்பந்த விழா செங்கற்பட்டு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் தி. ந. சம்பந்தம் அவர்கள் தலைமையில் நடைபெறும்; அதுபோது, தோழர் இரா. செழியன் அவர்கள் வாழ்த்துரை வழங்குவார்.

இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 5 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

★

# 'உடையும், உணவும் இலவசமாக அளிக்கப்பட வேண்டும்'

கழக உறுப்பினர் சந்தானம் வலியுறுத்தல்

1956—57-ம் ஆண்டிற்கான வரவு—செலவுத் திட்ட விவாதத்தின்போது கழக உறுப்பினர் திரு. பி. எஸ். சந்தானம் பேசுகையில் கிராம ஊழியர்களின் குறைகளையும், கீழ்த்தர சிப்பந்திகளின் குறைகளையும் களைந்தெரிய அரசாங்கம் போதிய அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை என்பது குறித்து வருத்தம் தெரிவித்துக்கொண்டார்.

சாத்தனூர் அணையில் உள்ள தண்ணீரைப் பயன்படுத்தி திருவண்ணாமலை பகுதி மக்களுக்குத் தண்ணீர் வசதி செய்துதர அரசாங்கம் முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

கிராம ஊழியர்கள் அனைவருக்கும் இலவசமாக உடை தரப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர்.

தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு அளிக்கப்படும் இலவச பகல் உணவு சலுகை மாவட்ட ஆட்சி மன்றங்கள் நடத்தும் பள்ளிகளிலும், தனியார் நடத்தும் பள்ளிகளிலும் படிக்கும் தாழ்த்தப்பட்ட பிள்ளைகளுக்கும் தரப்பட வேண்டும் என்றும், அதற்கு ஏற்றவாறு திட்டத்தைத் திருத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

## கைத்தறித் துணிகள் தேங்கி யிருப்பதற்குக் காரணம் என்ன?

ஏ. கோவிந்தசாமி கேள்வி

வரவு—செலவுத் திட்ட விவாதத்தின்போது தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது :—

"நமது மாநிலத்தில் உள்ள நிலக்கரித் திட்டத்தை மத்திய அரசாங்கத்திடம் ஒப்படைத்தது வருந்தத்தக்கதாகும்; சென்னை அரசாங்கமே அதனை ஏற்று நடத்தியிருக்க வேண்டும்.

"சிறுதொழில்களை தனியார் துறைக்கே விட்டுவிட வேண்டும். அதிலும் அரசாங்கம் தலையிடுவது விரும்பத்தக்கதல்ல.

"மக்களுடைய வாங்கும் சக்தி அதிகரித்துள்ளது என்று அமைச்சர் கூறியுள்ளார்; அது உண்மையாக இருப்பின் கைத்தறித் துணி தேங்கியிருப்பதற்குக் காரணம் என்ன? கைத்தறி விஷயத்தில் சென்னை அரசாங்கம் ஆச்சாரியார் கூறிய யோசனையை ஏற்றுக் கொண்டு அதனை அமுல் செய்ய முன்வர வேண்டும்.

"ஓராசிரியர் பள்ளிகளில் தேவைப்படும் ஆசிரியர்களின் பயிற்சிக் காலத்தை குறைத்து, அந்தக் காலத்தில் நல்ல முறையில் பயிற்சியளிக்க வேண்டும்.

## தனியார் நடத்தும் கல்வி நிலையங்கள்

### நிதி உதவி செய்யும் நோக்கம் இல்லையாம்!

சென்னை, ஜூலை 2—

தனியார் நடத்தும் தனி கல்வி நிறுவனங்களுக்கு அரசாங்கம் நிதி உதவி செய்யும் நோக்கம் இல்லை என்றும், அந்த நிறுவனங்களைத் தடை செய்து அரசாங்கம் ஏற்று நடத்தும் அவசியம் ஏற்படவில்லை என்றும் கல்வி அமைச்சர் சி. சுப்பிரமணியம் சட்டசபையில் தெரிவித்தார்.

★

# 'நிர்வாகத்தில் குறைகள் உள்ளன'

## 'மக்களுக்கு உதவிகள் கிடைப்பதில்லை'

கழக உறுப்பினர் இருசப்பன் தெளிவுரை

'நிதி அமைச்சர் வெளியிட்டுள்ள வரவு-செலவுத் திட்டத்தில் சில அம்சங்கள் வரவேற்கத் தக்கவகையிலும், சில அம்சங்கள் கண்டிக்கத்தக்கவகையிலும் உள்ளன,' என்று கழக உறுப்பினர் இருசப்பன் வரவு-செலவுத் திட்டம் பற்றிப் பேசுகையில் குறிப்பிட்டார்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தரப்பட்டு, பல ஆண்டுகளாக வேளாண்மை செய்யப்பட்ட நிலங்கள் திடீரெனப் பறிக்கப்பட்டு வேறு நபர்களுக்குத் தரப்படுவதைக் கண்டித்தரர்.

தரிசு நிலங்களை ஏழைகளுக்கு வழங்குவதன் மூலம் நாட்டின் உற்பத்தி பெருகும் என்பதைச் சுட்டிக்காட்டினர்.

விவசாயத்திற்குத் தண்ணீர் வசதி செய்துதர வேண்டும் என்று வலியுறுத்தினர்; இதற்ாக, தேவைப்படும் இடங்களில் ஏரிகளை உண்டாக்க அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

கிணறுகள் இல்லாத கிராமங்களில் அரசாங்கம் கிணறுகள் தோண்டியும் பயன்ஏற்படவில்லை என்றும், தாழ்த்தப்பட்ட மக்கள் அக்கிணற்றைப் பயன்படுத்திக் கொள்ள சாதி இந்துக்கள் அனுமதிப்பதில்லை என்ற உண்மையையும் எடுத்துரைத்தார்.

காளைகள் வாங்க அரசாங்கம் தரும் ரூ. 285 எல்லோருக்கும் கிடைப்பதில்லை என்றும், ஏராளமான மனுக்கள் இதுவரை கவனிக்கப்படாமல் இருப்பதற்குக் காரணம் நிர்வாகத்தில் உள்ள சிக்கல்கள்தான் என்றும் குறிப்பிட்டார்.

விலைவாசி உயர்வை நியாய வரம்புக்குக் கொண்டுவர அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் யோசனை கூறினர்.

# அன்பழகன் தெளிவுரை

(3-ம் பக்கம் பார்க்க.)

தேடித்தந்த வெற்றிக்கு நான் என்றும் கடப்பாடுடையேன்.

"தேர்தலுக்கு முன்புவரை கூட கழகத்தை அலட்சியமாகக் கருதியவர்கள், தேர்தலுக்குப் பிறகு, இன்று, தி. மு. கழகம் ஒரு நல்ல அரசியல் கட்சி என்று எண்ண ஆரம்பித்திருக்கிறார்கள்.

"தேர்தலில் கழகம், 15 சட்டசபை இடங்களைத்தான் பெற முடிந்தது. முன்கூட்டியே திட்டமிடாத காரணத்தாலும், போதிய பணவசதி இல்லாத காரணத்தாலும் நாம் எதிர்பார்த்த அளவு வெற்றிபெற இயலவில்லை; ஆனால், தேர்தலுக்குப் பிறகு நமது கழகம் நாடெங்கிலும் வளர்ந்து வருவதை நாம் காண்கிறோம்.

"வெற்றி பெற்ற மாவட்டங்களில் மட்டுமல்ல—வெற்றியே பெறாத மாவட்டங்களில் கூட நகரங்களில் மட்டுமல்ல—கிராமங்களிலும் வளர்ந்து வருவதை நாம் காண்கிறோம்.

"மக்கள், கழகத்தின்பால் மதிப்பான நோக்கங்கொண்டு, நமது கூட்டங்களுக்குத் திரண்டு வந்து, கழகத்தின் கருத்துக்களைக் கேட்டுச் செல்கிறார்கள்.

"இந்த வளர்ச்சி, நாம் தேர்தலில் நின்றதினால்தான் நமக்குக் கிடைத்துவருகிறது; தேர்தலுக்கு செல்லாமலிருந்தால் இத்தகைய வளர்ச்சி கிடைத்திருக்குமா என்பது சந்தேகம்தான்.

"நாம் தேர்தலில் நின்றது பதவிக்காகவோ, பட்டத்திற்காகவோ அல்ல!

"தி. மு. கழகம் துவங்கிய நாளிலிருந்து சமூக—பொருளாதார—அரசியல் கொள்கைகளுக்காகப் பாடுபடும் ஒரு கட்சியாகவே இருந்துவந்திருக்கிறது.

"பின்னர், சட்டமன்றத்தின் மூலமும் நமது கொள்கைகளுக்கு ஆக்கம்தேட முடியுமா என்ற சிந்தனை எழுந்தது; அதனால் தான் தேர்தலுக்கு நின்றோம்.

"முன்னைய சட்டசபையில் நாம் இல்லை; நமது ஆதரவைப் பெற்ற—நம்மீது அனுதாபம் கொண்ட இருவர்மட்டுமே இருந்தனர்.

"அவர்களைத் தவிர, நம்மால் ஆதரிக்கப்பட்டு உள்ளே சென்ற எவரும் வெளியில் வரவேயில்லை.

"உழைப்பாளர் கட்சியும், பொதுநலக் கட்சியும் நமது ஆதரவைப் பெற்று வெற்றிப் பெற்றன; ஆனால் அந்தக் கட்சித் தலைவர்கள் மந்திரிகளாயினர்—அந்தக் கட்சிகள் உருக்குலைந்தன!

"இவர்களைப் போன்றவர்களை நாம் மறுபடியும் ஆதரித்தால் மக்களின் குறைகளை யார்தான் சட்டசபையில் பேசுவது? யார்தான் எதிர்க்கட்சியாக அமைவது?—என்ற எண்ணத்தினாலே தான், 'மற்றவர் இழித்தும் பழித்தும் பேசினாலும் பரவாயில்லை; நாம் கடமையை செய்வோம்,' என்று கூறி, தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட்டது.

"தி. மு. கழகம் ஒரு நல்ல எதிர்க்கட்சியாகப் பணிபுரிய முடியும் என்று நாம் கருதுகிறோம்.

தி. மு. கழகத்தின் 'திராவிட நாடு திராவிடருக்காக வேண்டும்; என்ற இலட்சியத்திற்காக மட்டுமின்றி, சட்டசபையில் நாம், மக்களது, உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டிய பிரச்சினைகளையும் கவனித்துக் கொண்டிருக்கிறோம்.

"பாகல்மேடு கிராமத்திற்கு முதல்வர் காமராசர் போனார்; மக்களின் குறைகளை நேரில் கேட்டறிந்தார்என்று செய்தி வருகிறது. எப்போது? நாம் தேர்தலில் ஈடுபட்ட பிறகு! இதற்கு முன்பெல்லாம், ஏன் காமராசர்கள் கிராமங்களுக்குச் சென்று மக்களைக் கேட்டுக் குறைகளை அறிந்து கொள்ள முற்படவில்லை?

இதிலிருந்து அறிய முடியும்—'நாம் விரும்பும் ஜனநாயகக் கடமை, நாம் சட்டசபையில் நுழைந்திருப்பதினால் நன்கு நிறைவேறி வருகிறது' என்பதை!

"காங்கிரசின் சர்வாதிகாரம் தடுக்கப்பட வேண்டும்; எதேச்சாதிகாரத்திலிருந்து நாடு மீள வேண்டும்—என்று நாம் விரும்புகிறோம். அதற்காகப் பணியாற்றுகிறோம், சட்டசபையில்!

"நமது தென்னாடு, தொழில் துறை முன்னேற்றத்தில் புறக்கணிக்கப்பட்டு வரும் உண்மையை எடுத்துரைத்து வருகிறோம்.

"நெய்வேலி நிலக்கரியைத் தோண்ட முயற்சிக்கிறோம் என்று கூறவே 10 ஆண்டுகளாயிற்று, டெல்லி சர்க்காருக்கு! சேலம் இரும்பு, மக்களுக்குப் பயன்பட இன்னும் வழி பிறக்கவில்லை! அங்கு கிடைக்கும் மாக்னசைட்டிற்கும் அதே கதிதான்!

"ஆனால் வடநாட்டில், தொழிலபிவிருத்தி தீவிரமாக்கப்பட்டு வருகிறது.

"இன்று தொழில் துறையில், வடநாடு 'ஏரோப்ளேன்' போலவும், தென்னாடு 'கட்டை வண்டி' போலவும் இருக்கிறது.

இந்த அவலநிலைகளைப் போக்கத்தான் தி. மு. க. பாடுபடுகிறது"

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ

